### பாகவதம் - தஶமஸ்கந்தம.

தோஸ்ஸஹஸ்ரமதவயாததம வரமபாராயமேபவத,தளைலோக்யமபரதியோததாரம நலேபேதவதருதேஸமம, கணதேயஙிாவருஷைதாதோா பிராயுயுதஸாதிககஜாநஹம, அய்யயாருரணயநாதரீநபீதாஸதேவிபாதுதருவு., தசசருதவாபகவாங்கருதத: கேதுஸதேபஜ்யதேயதா, தவததாபககோபவேநஷ்ட ஸமயுகேமதஸமோநதே,இதயுக்த:குமதிாஹருஷட. ஸவகருஹமபராவிஶநருப—சிசசேதபகவாநபாஹஞாஶாகாஇவவநஸபதே .

### விஷ்ணு புராணம்.

பாணேபிபரதிபதயாத மைதரோயாஹதரிலோசனம, தேவபாஹஸஹஸ்ரேண கிாவிணேஸமயாஹவமவிநா, கஶசிகமமைஷோபாஹஞநாம ஸாபலயஜநகாரண , பவிஷயதிவிநரயுததம பாராயமமிமபுஜை —, ஶஙகர.—மயூரதவ ஜபஙகஸதே யதாபாணபவிஷயதி, பிஶிதாஶிஜநாநதம பராபஸயஸேதவமததாரணம.

### உமாஸம்ஹிதை

ஸ்ரீதேவி—தவததோவிஸிஷடபாவஸது விஷணேஸமபரதிபதயதே,கதமேததயாஸிநதோ கருபயாவதஸாவரத,ஶ்ருணுதேவிப்ரவக்ஷயாமி விஷணோராதிகயதாமபரதி, புராகதாசிததேவேஶிபரமாநந்தகாநகே, கரீடாஸகதேமயிபுரா விஶவமேததநாயகம, உபதருஷடம்ஸதாதுஷ்டைாவேஷுவாதபஹிஷகருதை:, ஸவாஹாஸவதாவஷட்காராஹிதேகர்மவாஜிதே, ப்ரஹமணைஜஞாதவருததாநத: காயமேஷமசிந்தயத், சக்ரபாணிபஸமாஹூய ரதகஸிமஹாஸேஶபே அபிஷேச்யவாநததவா ப்ராணமமகரவமபிரியே,ஸருஷ்டிஸ்திதிவிநாஶாகாம் கர்தருதவமகுதோபயம, ஸாவஜ்ஞதாதிஸித்திஞ்ச தத்தவாநஸ்மிவிஷ்ணவே, மததோதிகோபவாகாஜா பவவிஷணேமஹாப்ரபோ, இதிதத்தவா:பூர்வம் வாரணஸ்யாம்ஹரிபுரா, இதிஜ்ஞாத்வாகவிப்ராஹ மேகிரோப்யதிகம்ஹரிம்.

### భాగవతం.

శ్లో॥ దోస్సహస్రంత్వయాదత్తంపరంభారాయమేభవత్। త్రైలోక్యంప్రతియోద్ధారం నలేభే త్వదృతే సమం। కండూత్యానిర్వృతైర్దోర్భిర్యుయుత్సుర్దిగ్గజానహం ఆద్యాయాంచూర్ణయన్నద్రీన్ భీతాస్తేపిప్రదుద్రువుః తచ్ఛ్రుత్వాభగవాన్ క్రుద్ధః కేతుస్తేభజ్యతేయదా। త్వద్దర్పఘ్నంభవేన్మూఢసంయుగే మత్సమేనతే। ఇత్యుక్తఃకుమతిర్హృష్టః స్వగృహంప్రావిశన్నృప। అపన తరాధ్యాయం॥ చిచ్ఛేదభగవాన్బాహూన్ శాఖాఇవవనస్పతేః॥

### విష్ణుపురాణం.

శ్లో॥ బాణోపిప్రతిపత్యాథమై త్రైయూహత్రిలోచనం। దేవబాహుసహస్రేణ నిర్విణ్ణోస్మ్యాహవంవినా। కచ్చిన్మమైషాంబాహూనాం సాఫల్యజనకారణః। భవిష్యతివినాయద్ధం భారాయమమకింభుజైః। శంకర.। మయూరధ్వజభంగస్తే యదాబాణభవిష్యతి। పిశితాశిజనానందం ప్రాప్స్యసేత్వంతదారణం।

### ఉమాసంహిత.

శ్రీదేవీ। త్వత్తోవిసిష్టభావస్తు విష్ణోసంప్రతిపద్యతే। కథమేతద్దయాసింధోకృపయానదసువ్రత। శ్రీణుదేవిప్రవక్ష్యామివిష్ణోరాధిక్యతాంప్రతి। పురాకదాచిద్దేవేశి పరమానందకానసె। క్రీడాసక్తే మయిపురావిశ్వామేతదనాయకం। ఉపద్రుష్టంసదాదుష్టై ర్వేదవాద బహిష్కృతైః। స్వాహాస్వధావషట్కారరహితైకర్మవర్జితే। బ్రిస్తానాజ్ఞాతవృత్తాంతఃకార్యశేషమచింతయత్। చక్రపాణింసమాహూయరత్నసింహాసనేశుభే। అభిషిచ్యవరందత్వాప్రణామంకరవంప్రియె। సృష్టిస్థితివినాశానాం కర్తృత్వంకుతోభయం। సర్వజ్ఞతాదిసిద్ధించ దత్తవానస్మివిష్ణవె। మత్తోధికోభవాన్రాజాభవవిష్ణోమహాప్రభో। ఇతిదత్తవరఃపూర్వం వారణస్యాంహరిఃపురా। ఇతిజ్ఞాత్వాశివప్రాహమేనిశత్యధికంహరిం॥

ஜ்வராபக்ரமாந்த்ரயோகம:

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# இருபத்தைந்தாவது.

# சார்த்தூலஹர மூர்த்தி.



சமஸ்தலோக காரணபூதராகிய பரமேசுரன் கட்டளைப்படி திருமால்மோகினியுரு வேற்றுத் தாருகவனமுனிவர் தவத்தையழித்தும், பெருமானே பிக்ஷாடநத்திருவுருக்கொண்டு முனிவர் பத்தினிகள் கற்பையொழித்தும் நகரிற் புறம்போந்தபோது, பெருமான் பக்கலிற் சேர்ந்த திருமால் பெண்ணுருநீங்கினர். அப்பொழுது அயன்முதலிய அமரர் ஆண்டடைந்து வணங்கினர் அவற்றையெல்லாம் நன்குணர்ந்துள்ள தாருவனமுனிவர் ஓர் வேள்விசெய்து தம்மை யழிப்போமென்று அபிசாரஹோம மியற்ற, அவ்வக்கினியில் நினைத்தற்குமரியவுருவும் இடிமுழக்கனைய வெடிபடுதொனியும், பெரியவாயும், வளைவாகிய பற்களும், கூர்மைவாய்ந்த நகமும், தீப்பொறி சிந்துஞ் சிவந்தவிழியும் அஞ்சாமையுமுடைய புலியொன்று அதிகரித்த கோபத்துடன் தோன்றியது. முனிவர் வல்லியத்தைநோக்கி முக்கட்பிரானை முடிக்கவென விடுக்க, அது விடையூர்தியைத் தேடி விரைந்துவருகையில், உலகினர் அச்சுறவோடிவரும் உழுவையை உம்பர்பெருமான் எதிர்சென்றுபற்றிச் சங்கரித்துத் தமதருமைத் திருமேனியில் அதன் சருமத்தை யாடையாக வணிந்தனர்.

வல்லியம் வலியிழந்து வஸ்திரமானபின், எவற்றையுமழிக்கும் இணையில்லாக் கணிச்சி யொன்று, எரியிலிருந்து பிறக்க, அத்தனர் ஐயன்மேல்விடுப்ப அஃது எதிர்வர, சங்கரர், தமது செங்கையிற் பற்றி இங்கொரு படையா யிருக்கவென விசைத்தனர். மீண்டும் ஓர்

மான் உற்பவித்தது. அதனை மகாதேவன்மேற் போக்க, அது சரா சரமெல்லா மழியும்படி இரைச்சலிட்டு அக்கிரமமாக்கமா யெழுந்து வரக்கண்ட அரன் அதனொலியால் உயிர்கள் வருந்தாது கிருபைபுரி ந்து இடக்கரத்தேற்று "ஈண்டிருந்திரைக" எனப் பணித்தனர். அதன்மேல் சர்ப்பங்கள் பிறந்தன. அவற்றைச்செலுத்த, சம்பு சரீ ரத்திற் பணியாக அப்பணிகளை யணிந்தனர். பூதவெள்ளம் தோன் றின. ஆதிநாதன்மேல் ஏவினர் மாதுபாகர் வருகெனவிளித்து "நமது சேனையாய் நாளுமிருந்திர்" என நன்கருளினர். ஒரு வெண் டலை உலகழியச் சிரித்துத் தோன்றக்கண்டு சிவன்மேற் பிரயோகி க்க, சிவபிரான் திருக்கரத்தாற்பற்றிச் சிரமீதணிந்தனர். இவற்றைக் கண்டமுனிவர் முனிவுற்று,முன்னவன்மேல் மந்திரங்களைவிட அவை துடியுருவேற்று இடியென முழக்கி யெதிர்வர, எம்பிரான் கரத்திற் பற்றி"என் கன்னத்தில் முழக்குக" எனக் கட்டளையிட்டனர். தாரு வனத்தோர் தரியாக்கோபத் தழலால் மீண்டுமே யாகஞ்செய்ய முய லகன் பிறந்தான் முனிவர், முயலகனையும் ஹோமாக்கினியையும் 'உமை கேள்வனை யுயிர் செகுக்க" என வோதியனுப்பினர். கோ வரக்கண்ட நின்மலர் நெருப்பைக் கையிற் றாங்கி, நிசாசரனாகிய முயலகனை நிலத்தில் வீழ்க் காலாற் றள்ளி முதுகின்மேல் தமது முண்டகத்தாளூன்றி நின்றனர். வேறொன்றுஞ் செய்யமாட்டாத வேதியர் பல சாபமிட அவை தாணுவினிடஞ் செல்லாமைகண்டு ஏமாறிநின்றனர். முயலகன் முதுகை யசைக்க முக்கணர் நடிக்க, கண்ட நான்முகன் முதலானோர் "அரகர சங்கர சம்பு" எனத் தொ ழுவாருந் துதிப்பாரும் களிப்பாரும் கைகுவிப்பாரும் பாடுவோரும் பணிவாருமாயினர்.

சிவபெருமான் தம்மைப் பணியாத தாருவனமுனிவருக்கு ஞான த்தை யநுக்கிரகித்தனர். அதனால் அந்தணர் அறிவடைந்து "ஐய னே! அடியேங்க ளறியாமையாற் பலவகையாகத் தேவரீரை யவம தித்தோம். அவற்றை மன்னிக்கவேண்டும் அருட்பெருங்கடலே"

என்று பல்முறை பணிந்து உடல் நடுங்க உரை குழற உரோமம் புளகிப்ப உள்ள முருக ஆனந்தவெள்ளம் பெருக வேண்டினர். சிவபெருமான் "முனிவரே! சைவ நெறியைக் கைக்கொண்டு நற்றவம்புரிந்து காணிலத்திருத்திர்" என்று விடுத்து, திருக்கைலையையடைந்து திருமால் பிரமன் முதலானோரைத் தத்தமிடனுஞ் செல்ல விடுத்தனர். இதன் முற்பட்ட சரித்திரத்தைப் பிக்ஷாடனமூர்த்தத்திற் காண்க.

ஈண்டு தாருவனமுனிவர் செய்த அபிசாரவேள்வியில் தோன்றி அவர்கள் ஏவலின்படி வந்த புலியைச் சங்கரித்து உடையாகப்போர்த்த கோலமே சார்த்தூலஹரமூர்த்தமென்பபடும்.

### கந்தபுராணச் சுருக்கம்

"தீவினைமாதர்கள் கற்பழித்தவனைச் செகுத்திடுவோமென்று
மாதழற்கொண்மகம்புரிந்தினவந்துவந்துபிறந்திடுவெ
காதுவெம்புலிபரசுநவ்விகடும்பணித்திரள்பூதர்கண
மோதுவெண்டலைதிண்டிறற்றுடிமுயலகன்றனையேவினோ
வேங்கைதன்னையுரித்துடுத்தனன்மிக்கசார்தர்தன்னையாய்ப
பாங்குறும்படியோதினொன்றொருபாதவண்கமலத்தினு
லேங்குறும்படிமுயலகன்றனையீடினேமிதித்தனன்
வாங்கருங்கவின்றுறுமேனியின்மற்றவையாவுமணிந்தனன்"

சார்த்தூலஹரமூர்த்தயேகம:





26 பாசுபத மூர்த்தி.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# இருபத்தாறாவது

# பாசுபதமூர்த்தி.

சந்திரவம்சத்து மன்னரில், பாண்டு புத்திரர் பஞ்சவர்கட்கும், திருதராட்டிரன் மக்கள் நூற்றுவர்கட்கும் தொடர்ந்த பாரதப் போரில், பதின்மூன்றா நாளினப் போரில், பலவாயிரவரான சஞ்சத்தவர்களைப் பார்த்தன் கொன்று திரும்புமுன், அநேக அரசருடன் அமர்செய்து அவர்களை அபஜெயப்படுத்திவரும் அபிமந்யு வென்னும் அருச்சுனன் சுதனைச் சயத்திரதன் சங்கரித்தனன். அதனைப் பாடிவீட்டிற் கேட்டறிந்த பற்குனன் பதைத்துத் துடித்து வேர்த்துக் கனத்துக் கோபித்துப் பற்களைக் கடித்து மீசை துடிக்கத் தோளைப் புடைத்து "என்மகனைக் கொன்றவனை நாளைச் சமரில் நாசஞ்செய்யேனாகில் நான் எரியில்வீழ்ந்திறப்பேன்" எனச் சபதஞ்செய்தனன்.

அப்பொழுது அவ் வருச்சுனனுக்குச் சாரதியாயும் அருந்துணையாயும் மைத்துனனாயுமுள்ள கண்ணன் அவனைப் புறத்தே கொண்டுபோய்த் தேற்றி "காலையிலிருந்து கம்பமியாக விருத்தலின் நீயின்னே கனிகளையேனும் புசித்துக் களையாறுக" என, அருச்சுனன் "அடியேன் அரனை அருச்சித்தன்றி அருந்தேன்" என, கிருட்டிணன் "என்னையே பெருமானாக எண்ணி யருச்சிக்க" என, இசைந்து, அவனணத்திலிருந்த அநேகமலர்களைக்கொண் டருச்சித்து, அங்குக் கிடைத்த பழவருக்கங்களாற் பசியையாற்றி, அன்றெல்லாம் அயர்ந்திருந்தமையின் அவ் வரண்மனையிலேயே கண் துஞ்சினன். கண்ணன் அவனுடலைப்பாதுகாக்க அமரர் நிலைமை உண்டாமைத்துப் பார்த்திர் சோகத்தாலே துயிலுஞ் சவ்யசாசியின் கனவில் தோன்றி

னன். நரன் நாரணனை நமஸ்கரித்தனன், மதுசூதனன் "மைத்துனா! துரோணர் முதலானோர் காப்பினும் நாளைப் போரிற் சிந்துமன்னனைச் சிரமழிக்கும்படி திருக்கயிலை சென்று சிவபிரானது திருவருள்பெற்றுத் தினகரன் உதிக்குமுன்னர்த் திரும்புதும்' என அருச்சுனனுங் கனவிலே சம்மதித்தெழுந்தனன்.

கண்ணன் அருச்சுனனென்னும் இரண்டு கருமலைகள், கயிலையாகிய வெண்மலையை நண்ணி, பார்வதி யாகிய பச்சைமலையைப் பாகமாகக்கொண்ட பரமேஸ்வரனென்னும் பவளமலையைக்கண்டு பணியும்படி அப் பருப்பத மடைந்து முதற்பெருங் காவலாகிய நந்தியெம்பெருமானது நளின சரணங்களை நமஸ்கரித்து அவரருளைப் பெற்றுத் திருச்சந்நிதியினுட்சென்று தேவமுனி கணங்கட்கிடையே சிங்காதனத்திற் சைலராசபுத்திரியாருடன் வீற்றிருக்குஞ் சிவபெருமானைத் தரிசித்து, பன்முறை நிலமேற் பணிந்து கைகூப்பி நின்று,

"நித்தனே நிமலனே நிகழ்நின்றுமனே
அத்தனேயடியவர்க்கெளியவண்ணலே
பித்தனேயாதியந்தங்கள்பேசொணா
முத்தனேயுயிர்தொறுமுலாயமுன்பனே" — எனப் பல

வாழ்த்துத் துதித்துக் கண்களில் ஆநந்தபாஷ்பஞ்சொரியும் நரநாரணர்களை நோக்கி, நம்பர் "இவ்விரவில் விரைவாக ஈண் டடைந்ததென்னை காரணம்?" என வினவ, ஸ்ரீக்ருஷ்ணார்ச்சுனர் "தேவதேவா! தேவரீர் முன்திருவருள்செய்த பாசுபதத்தால் நிவாதகவசர் காலகேயர்களை வதைத்தோம். அதன் முஷ்டிகளை நிலைப்பட அநுக்கிரகிக்கவேணுமே" என வேண்ட, அமலர் அவ்வாறே தடாகத்திலிருந்த பாசுபதத்தை இருவரா லெடுத்துவரச்செய்து, முஷ்டியில் (கனவிலும் மறவாவண்ணம்) முற்றப்பெற வுணர்த்தினர். அருச்சுனன் அன்றிரவிற் றன்னாலே அருச்சித்த கடிமலர் யாவும் அண்ணல் மேனியி லமர்ந்திடக் கண்டு ஆநந்தபரவசமாய் வணங்கி நின்றனன். கண்ணன் என்னிலக்கு கைகூடியதென்று களித்துக் கைகொட்டிநின்றனன்.

கண்ணுதல் உளமகிழ்ச்சியுடன் "பாரதப்போரிற் செயமுண்டாகக்கடவது" என ஆசீர்வதித்து விடையளிக்க, விடையூர்தியின் திருவருள் பெற்ற இருவரும் இறைவரது திருவடியைப் பணிந்து அப்புறம்போந்து ஆலயத்தை வலம்வந்து திருக்கைலையை நீங்கித் தம் இருக்கை சார்ந்தனர். அருச்சுனன் இவ்வாறு சொப்பனங்கண்டு துணுக்கென்று விழித்து அம்பறாத்தூணியில் அவ்வத்திரமிருத்தலின் உண்மையெனத் தெளிந்துகொண்டனன். சுயோதனன் யுத்தியும், துரோணன் வல்லபமும் பலமன்னர் பராக்கிரமமும் மாயன் வஞ்சனையா லொழிந்தன. அருச்சுனன் தனக்குச் சிவபிரான் பிரசாதித்த பாசுபதக்கணையாற் சிந்துதேசாதிபதியாகிய செயத்திரதன் சிரசைக்கொய்து சபதத்தை நிறைவேற்றினன். கிருஷ்ணமூர்த்தியும் அருச்சுனனும் அவாவியவண்ணம் அவர்க்கு அஸ்திரமருளிய அவசரம் பாசுபதமூர்த்தமெனப்பமே.

பாசுபதமூர்த்தயே நம:

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்

---

# இருபத்தேழாவது
# கங்காளமூர்த்தி.

ஒருநாள் சிவாலயத்துள்ள திருவிளக்கொன்று சுடர் மழுங்குகையில், சிவபெருமான் தேவியாரைப்பார்த்து "பெண்ணே! இத் திருவிளக்கின் திரியைத் தூண்டுவோர் திரிலோகமும் அரசுசெய்வர்" என்றனர். அப்பொழுது ஓர் எலி அத்தீபத்திலிருந்த நெய்யைக் குடித்ததால் அஃதசைந்து திரி தூண்டப்பெற்றது. இறைவியார் எம்பெருமானை நோக்கி "இப்பொழுது இதனைத் தூண்டிய இவ் வெலிக்கு இன்னருள் புரியவேண்டும்" என, அண்ணல் "அவ்வாறே அளித்தனம்" என்றருளினர்.

அஃது மாவலியென்னும்பெயருடன் அசுரகுலத்திற்றோன்றி, அவனி முழுவதையும் அரசுபுரிந்து தானவர்குழாம் வலி மிகுதல் கண்டு வானவர்கோன் மனம்பொறாது எண்ணிலலாச சேனையுட னெதிர்த்துப் போர்செய்து புறமுதுகிட்டோடி, திருமாலபால் கூறினன். அச்சமயத்தில் அதிதி யென்பவள் விண்டுவை வேண்டி "என் மைந்தனாக வரவேண்டும்" என வரங் கேட்க, அரவணைத் துயில்வோன் அவளுக்கு "அவ்வாறே யாகுக" வென்று வரமளித்து, அயிராணி கேள்வனை நோக்கி "அமரர் பெரும! அஞ்சற்க. அவனை அடர்ப்போம்" என்றருளிக் காசிபமுனிவருக்கும் அதிதிக்கும் மைந்தனாக வாமனாவதாரஞ் செய்தனர்.

மாவலி அசுரனாயிருப்பினும் யாகங்கள்பல செய்தும், அவ்வவர் விரும்பிய தானங்களை அபரிமிதமாக அளித்தும், நற்செயலிலேயிருந்தனன். வாமனவடிவங்கொண்ட மாயவன் மாவலி மாளிகையை

ஜகத்ரக்ஷகா! சரணம்! சரணம்!!" என்று பேரிரைச்சலாயத்தோத்திரஞ்செய்ய, எல்லா மறிந்த எம்பெருமான் ஓர் விளையாடலாக ஒன்று மறியார்போன்று "உம்பர்களே! உங்களுக்குற்ற துயர் யாது? ஓதுமின்" என்றுத் திருவாய்மலர்ந்தருளினார். வானவர் "மகாதேவா! மாவலிபால் மாயவன் வாமனவடிவாய்ச் சென்று மண் யாசித்து வானுறவோங்கி மாவலியை மாய்த்து, மமதையால் வையகத்தை வதைக்கின்றனன். அவனை விரைவில் அடக்காவிடில் அமரர் அந்தணர் முதலானோர் அரைக்கணத்தில் அழிவது சத்தியம்' என முறையிட, அருள்வள்ளல் அகிலத்திலுள்ள அனைவர்க்குமுற்ற ஆபத்தை அகற்றும்படி அக்கணமே அவ்வாமனன் முன்னரடைந்து, மயக்கமொழிய வார்த்தைகள் சில வாய்மலர்ந்தருளியும் *பிருகுமுனிவன் சாபப்படி விண்டு கருப்பாசயமுற்ற பாசவீக்க முதிர்ச்சியால், கேளாமல், இறுமாந்திருப்பதுநோக்கி, இறைவர் இணையில்லாச் சினங்கொண்டு வச்சிரதண்டமொன்று திருக்கையிலேற்று வாமனன் மார்பிலடித்தனர். வாயுவேகத்தாற் சாய்ந்த மேருமலைபோல் வாமனன் தரைமேற் சாய்ந்தனன். அப்பொழுது அவனது தோலையுரித்துக் கஞ்சுகமாகத் தரித்து, முதுகெலும்பைப் பிடுங்கித் தண்டாகக் கையிற்கொண்டு கடவுளர் துயரொழித்துக் கயிலையடைந்தனர்.

அச்சுதன் அகந்தையகன்று பண்டைய உணர்வெய்திப் பரமனைப் பரவி, தேவமுனிவர்கட்கு வாமனபுராண மோதி வைகுந்தஞ் சேர்ந்தனர். மாவலி நற்கதி பெற்றனன். சிவபிரான் வாமனனது முதுகென்பைக் கொண்ட கோலமே கங்காளமூர்த்தமெனப்படும்.

[வாமனன் வானை யளந்தபொழுது மேலண்டகடாகம் பின்வுற்று, ஆகாயகங்கை பொழிய, அது மானவதேசவழியாய்ச் சமுத்திரசங்கமமாயிற்று. அதன் விருத்தாந்தத்தை யறியார் சிலர் அக்கங்கையைச் சிவபிரான் அளித்தனரெனக் கூறுவர். அஃதபத்தமென்க]

---

*ஆதியில் அமரருக்கும் அசுரருக்கும் நிகழ்ந்த அமரில் அமரர்கள் ஆற்றலில்லாராய் விண்டுவை வேண்டியதுகண்டு திருமால் செரு

ககளுஞ்சோர்ந்து திகிரியைச் செலுத்தித் தீயோர் டனைவரைச் செருத்த னர். போனவ ரொழிந்த தானவர் சிலர் தம துயிர் தப்பிப் பிழைக் கச் சமாதுறந்தோடிப் பெருந்தவஞ்செய்யும் பிருகுமுனிவர் பன்ன சாலை யடைந்து அவர் பன்னியாகிய கியாதியென்னுமாதினை யடைக்கலம் புக, அவ் வம்மை "அஞ்சேல்" என் றபயமளித்து ஆச்சிரமத்தில் வைத்துக் காத்தனள். சீற மிகுந்து தீச்சொரி விழி யொடுஞ் சக்கரப்படையைத் தாங்கிய கையொடுஞ்சீதரன் பாதசாரி யாக வருதல் கண்ட கியாதி யெண்ணங்கி நிற்க, மாதவனினைந்து மாதினை சிரத்தைக் கொய்து தானவர் குழாத்தைச் சங்கரித்தொழிந்தனன்.

பிருகுமுனிவர் தன் பெண்சாதியைக் கொன்ற பின்னை கேசவன் மேற் பெருங்கோபங்கொண்டு "கேசவா! ஈசனை யன்றி யெவரை யும் பணியோம் சைவசமயமே தாணியிற் சிறந்ததென் றெண்ணி யா மிருப்பத் துணைமையாயினை, இந்த பிறவிக ளீரைந் தெய்தி வரு ந்தியழிக" வென வசைமொழி யிசைத்து "நின்னடியார்கள் நெறி யிலாவழி நீக்கை பெற்றுச் சிவநிந்தை செய்து நிரயகடைக" என க்கோபமேலிட்டுக் கூறி, சக்கிரனு மயிர்த்தெழுந்த தோகையோடு களித்து வாழ்ந்தனர். திருமால் தனக்குற்ற பிருகுவின் சாபம் பிரிய வகை யாதெனப் பெரிது மாலோசித்துத் திரிபுரதகனை சேவடிவ ணங்கிப் பெருமுனி சபித்த பிறப்பொரு பத்தும் ஒழிப்ப லென்று தன் னுள்ளத்தெண்ணிச் சிவலிங்கக் குறியொன்று பிரதிட்டைசெ ய்து பாசுபத விரதம் பூண்டு உடலெங்கு திருவெண்ணீறு சண்ணி த்துத் திரிபுண்டரந் தரித்து உருத்திராக்கம்பூண்டு உருத்திரசமக மகாமந்திரஞ் சபித்துக்கொண்டு, சருகு-நீர்-பழம்-காற்று முதலிய வற்றைப் பக்ஷித்து ஒரே மனதாய உமாபதியை உள்ளத்திருத்தி, பஞ் சாக்கினிமத்தியிற் பலகால நின்று தவஞ்செய்தனர். அவர் தவத்திற் களித்த அடியவர் சகாயர் அம்பிகை சமேதராய் இடபவாகனமிவர் ந்து தரிசனந்தர, கமலக் கேசவன் கண்கள் களிக்கக் கண்டு 'அரகர' வென்று சிரகரமங்களாற் றுதித்து அஷ்டாங்க பஞ்சாங்க நமஸ்கா

ரம் பல முறை செய்து பணிந்து நிற்க, பரமன் களித்து "மாதவ ! யாது வேண்டினை" என்று திருவாய்மலர்ந்தருள, சாரங்கன் "சங்கர ! பிருகுமுனிவன் சாபத்தை விலக்கியருளவேண்டும்' என்றிரப்ப பெருமான் "எமதடியவர் இசைத்த மொழிகள் என்றும் தவறாரு மாதலின் உள்ள மண்டலத்திற் குதவியாயப் பிறவி பத்தும் நீ பெறுத லே திண்ணம். ஆயினும் நம்மடி யருச்சனைப் பலத்தால் ஜந்மினி லமரு மறைந்தினிற் றண்டமு மடைதி" என்றருளக் கேட்டுக் களித்து "தேவரீரோ அடியேனைத் தண்டிக்கவும் காக்கவும் நாயேன் பெருவாழ் வுற்றதுன்னைப் பாக்கியம்" என்று வணங்கச் சிவபெருமான் அந்தர்த் தானமாயினார். அவற்றுள் முற்பட்ட ஜந்நில் தண்டமும், பிற்பட்ட ஜந்நிற் சிவார்ச்சனை செய்யும் பெரும்புண்ணியமும் பெற்றான் திரு வருளாற் பெற்றனனென்பது சிவபிரானே சர்வதேவர்கட்குஞ் சிக்ஷ கர் என்றறிக.

ஸ்ரீலிங்கபுராணம்.

விஷ்ணும்ப்ரஹ்மாணமிந்த்ரஞ்சயமமந்யாஸ்ஸுராநபி
யதோநிக்ருஹ்யஹரதே ஹர இத்யுச்யதே புதை

లైంగపురాణము.

విష్ణుంబ్రహ్మాణమింద్రంచ యమమన్యాన్సురానపి ।
యతోనిగృహ్య హరతే హరఇత్యుచ్యతే బుధైః ।

ஸ்காந்தம் விஷ்ணுவாக்கியம்.

த்வம்விஸ்வகர்த்தாத்ரபவாந்நகர்த்தா
த்வம்விஸ்வபர்த்தாத்ரபவாந்நபர்த்தா
த்வம்விஸ்வஹர்த்தாத்ரபவாந்நஹர்த்தா
த்வம்விஸ்வநாதாத்ரபவாந்நநாத.

త్వంవిశ్వకర్తా౽త్రభవాన్నకర్తా । త్వంవిశ్వభర్తా౽త్రభవాన్నభర్తా।
త్వంవిశ్వహర్తా౽త్రభవాన్నహర్తా।త్వంవిశ్వనాథా౽త్రభవాన్ననాథః॥ సాంబ్యదం

யுனையிகழ்ந்தோ ரெமையிகழ்ந்தோ ரென்ன வோதி, யேற்றையிருங்
கொடியுயர்த்த செக்கர் வேணி யிறைவனுயர் தடங்கயிலை யெய்தினு
னே.' —எனவும், வரும் பிரமாணங்களாற் சிவசத்திகளுள்ளே விஷ
ணுமூர்த்தியும் ஒன்றென்பது பெறப்பட்டது.

அத்தகையபேற்றினையடைந்த அச்சுதர் சிவபிரானுடைய திரு
வுள்ளக் குறிப்பின்படி பராசத்தியேயாவர், பரியாயத்தாற் பார்வதி
யும் ஆணுருவாகையில் விஷ்ணுவும் குரோதமுற்றுற் காளியும் யுத்த
முனையிலே துர்க்கையுமாக விளங்குவர்.

అగమశాస్త్రే.

పుంస్త్వశక్తిః పరమేశ్వరస్య ప్రయోజనార్థాయచతుర్విధాభూత్ ।
భోగేభవానీపురుషేషువిష్ణుః క్రోధేచకాళీసమరేచదుర్గా ॥

ஆகமசாஸ்திரம்.

ஸைகவசக்தி பரமேசுவரஸ்ய ப்ரயோஜநார்த்தாய சதுர்விதாபூத்
போகேபவாநீ புருஷேஷு விஷ்ணு க்ரோதேசகாளீ ஸமரேச துர்க்கா.

ஒருகாலத்தில் உமையம்மையார் சிவபெருமானைநோக்கி விர
தங்களுட் சிறந்த சோமவாரவிரதத்தை ஆசரித்து வசிஷ்டராதி
முனிவர்கட்கு அன்னமளிக்கையில், இறைவியாரது தவஞ்செயலைக்
காணவிரும்பிய எம்பெருமான், விஷ்ணுமூர்த்தி பரியாயப்பின்னவர்,
தாம் விருத்தவேதிய வடிவேற்றெழுந்தருளி, விமலையின் விரதத்
தைச் சோதித்து, பெருமான் தமது நிஜவடிவும், திருமால் முதலா
பார்ப்பதி யுருவும் பின்னர்த் தனது நிஜவடிவுங்காட்டத் தரிசித்துக்
களித்தனரெனவும் ஓர் சரித முண்டு.

சைவபுராணம்.

போபோகிரீசத்ரதயே பதயோஸாதம்தவாஜிரம்
ப்ராப்தமக்காரிகமமாமலை விதிப்ராஹமணபுங்கவம்.தி.

அதாலோக்யமஹாதேவம் விஸ்மயோத்புல்லலோசநா
கிமிதம்தேவிலஸிதம் ஸேயமித்யாஹபார்வதீ
அதேதங்கிரிஜாஜ்ஞோக்தைத்யாரீ நாரீரூபமவிஹாயதத
ஸ்வரூபம்தர்ஶயாமாஸ பார்வத்யா ஸந்நிதௌஹரி:
நீலநீரதஸங்காஶ: புண்டரீகதளேக்ஷண.

తదుక్తంశైవపురాణే.

భూయోభూయోగిరింప్రతనయొ పత్న్యాస్సార్థంతదాజిరం|
ప్రాప్తఃకృష్ణార్థనంమారాన్తై విద్ధిబ్రాహ్మణపుంగవం||
అథాలోక్యమహాదేవం విస్మయోత్ఫుల్లలోచనా|
కిమిదంతేవిలసితం సేయమిత్యాహపార్వతీ|
అథేదంగిరిజాప్రోక్తో దివ్యారీనారీరూపంవిహాయతత్|
స్వరూపందర్శయామాస పార్వత్యాఃసన్నిధౌహరిః|
నీలనీరదసంకాశః పుండరీకదళేక్షణః|

அம்பிகைபோன்ற அந்தத்தைய அழகியவுருவை அச்சுதா எ
வாறடைந்தனனென்று பரியாலோசிக்கும்பக்ஷத்தில், அகிலலோக
திலுஞ் சிறந்த திரிபுரஸுந்தரி என்னுங் காரணப்பெயர் வாய்ந்த எ
ந்தாயாகிய கவுரியைக் கருதிக் காலம் பல கடுந்தவஞ்செய்து கைக
ப்பிய பணிந்து சகலவரியாளைப்போன்ற திவ்ய வடிவை அவ்வம்மை
யார் திருவருளினாலே படைத்தனர் எனக் கொள்க.

ஆநந்தலஹரி.

ஹரிஸ்த்வாமாராத்யப்ரணதஜநஸௌபாக்யஜநநீம்
புராநாரீபூத்வாபுரரிபுமபிக்ஷோபமநயத்-ஸ்மரோபித்வாம்நத்வா

ఆనందలహరి.

హరిస్త్వామారాధ్యప్రణతజనసౌభాగ్యజననీం |
పురానారీభూత్వాపురరిపుమపిక్షోభమనయత్ | స్మరోపిత్వాంనత్వా

### ஸௌந்தர்யலஹரீ.

ஸமுத்பூதஸ்தூலஸ்தநபரமுரச்சாருஹஸிதம்
கடாக்ஷகந்தர்பா கதிசநகதம்பத்யுதிவபு
ஹரஸ்யத்வத்ப்ராந்திமநஸிஜநயந்தஸ்ஸமதுலே
பவத்யாயேபக்தா:பரிணதிரமீஷாமியமுமே.

### సౌందర్యలహరి.

సముద్భూతస్థూలస్తనభరమురశ్చారుహసిత |
కటాక్షైకందర్పాఃకతిచనకదంబద్యుతివపుః |
హరస్యత్వద్భ్రాంతింజననిజనయంతస్సమతులే |
భవత్యాయేభక్తాఃపరిణతిరమీషామియముమే ||

என்றெடுத்துக்காட்டிய இவ்வகைய பலவேதுக்களால், திருமால் சிவசத்தியே யென்பது பெறப்பட்டது. புருஷபாகம் வலப்புறமெனவும் பெண்பாக மிடப்புறமெனவுங் கூறப்படுமே நியாயத்தால் சிவபிரானது வாமபாகத்தைத் திருமால் சிவார்ச்சனை செய்து பெற்றுக்கொண்டனர். அச்சிவ கேசவரிருவரும் ஒருவடிவாய் (அர்த்தநாரீசுரர்போல) வலப்புறம் செக்கிறமாய் மழு அபயமும், இடப்புறம் பசுமையாய்ச் சக்கர வரதமுந் தாங்கி ஒரு திருமேனியுடன் ஏகபீடத்தில் சமானமாக எழுந்தருளியிருப்பர். அத்திருவுருவத்தைச் சங்கரநாராயணனெனச் சற்றும் பேதமின்றி ஒருமூர்த்தியாய உபாசனார்ச்சனைகள் புரிந்து நற்கதியுற்றோராகிய கண்ணுவராதி முனிவர்கட்கு எண்ணில்லை. இத்தகைய இலக்கணமாக, கேசவனைப் பாதியாக வுடைத்தாயிருத்தலின் பெருமான் கேசவார்த்தமூர்த்தியென்த் திருநாம மெய்தினர். இத்திருவுருவம் ஹரிஹரம் என்னும் க்ஷேத்திரத்தில் பிரசித்தமாக விளங்கும்.

### ந்ருஸிம்ஹோத்தர புராணம்.

ஹரிஸங்கரயோர்நாஸ்தி யுவயோர்பேதஸம்பவ
யேபேதபுத்யாபஸ்யந்தி தேநராயுவயோர்ஹர-இத்யாதி.



29 பிக்ஷாடன மூர்த்தி.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# இருபத்தொன்பதாவது
# பிக்ஷாடனமூர்த்தி.



தேவதாருவன முனிவர் சிவபக்தியில்லாராகி, யாகமே முதற் பயக்கவல்ல நற்கருமமென்று சிந்தித்து விழைவுடன் எண்ணில்லா வேள்விபுரிவாராயினர். பரந்த வுலகில் நிகழும் பலவற்றையு மறிந்த பரமபதி யிதனை யுணர்ந்து, திருமாலைத் தம்பாலவரத் திருவுளஞ் செய்ய, கமலக்கேள்வன் கண்ணுதல் கருத்தறிந்து கயிலையங்கிரியை யடைந்து, திருநந்திதேவர் விடைபெற்றுத் திருச்சந்நிதானத்திலுட் சென்று சிவபெருமானைப் பணிந்து நிற்க, விடையூர்தி விருப்புடன் விண்டுவைக் கைப்பற்றி யெழுந்து வெள்ளிமலையை விலகி வெளி வந்து "மாதவ! முன்னொருகால் நீ கொண்ட மோகினி யுருவை யீண்டெடுத்தக" என, பன்னகசயனன் பணிமேற்கொண்டணியிழை யா யப்பொழுதே யாயினன் மாலென்னும் பெயருக்கேற்பத் தமது திருவுருவைக்கண்டு மாலெய்தும்படி அம்பிகாபதியும் அவ்வரிவைக் கேற்ற ஆடவசிரேஷ்டராயவடிவேற்று, கபாலமுஞ் சூலமும் கையிற் பற்றிய திகம்பரராய பிக்ஷாடனத் திருக்கோலங்கொண்டு, முனிவர் வாசமாகிய தாருவனத்தை மோகினிப்பெண்ணுடனண்ணினர்.

அச்சமயத் தருந்தவத்திருந்த அந்தணர்குழாம் அரிவையைக் கண்ணுற்றறிவழிந்து தவநெறிதவறி அவநெறிகொண்டு காமவிருப்ப மேலீட்டாற் பின்றொடர்ந்து, விளக்கைக்கண்ட விட்டில் போலத் துன்புறுவாராயினர். இத்தகையமாயையியற்றும் வலிதக்க மாயனு கிய மோகினியை மகாதேவன்பிரித்து, கையிற்கொண்ட பரிகலத்தி லையமேற்பார்போல முனிவர் வீதியிற் சென்று பண்ணோசையோடு

உள்ளாளக்கீதம் பாட முனிபன்னியர் கேட்டு, அவ்வினிய வோசை யுடன் பாடுவோனைக் காண விரும்பி வீதிவாயில்வந்து பெருமான பிக்ஷாடனத் திருக்கோலத்தைத்தரிசித்துக் காமத்துயரிற் கட்டுண வருந்தினர். அரிவையர் சிலர் ஐயனையணையும்படிப் பிரார்த்தித்தன பெண்கள் சிலர் பிச்சையிட்டனர் கன்னியர்சிலர் காமநோயா கலையவிழ்ந்தனர். மாதர்கள் சிலர் வளைகழன்றனர். நங்கையர் சில நாணமழிந்தனர். எம்பெருமானது திருவிளையாடலால மாமாயாசா வித்தைபோல் அம்மாதரிடம நாற்பத்தெண்ணாயிரம் புதல்வர் அ காலத் துதித்தனர்.

அப்பின்னர்களை பிக்ஷாடனமூர்த்தியைப் பணிய, புராரி " எ மைநோக்கித் தவஞ்செய்க" எனவிடுத்து, நகரின் புறம்போந்தன முனிவர் மோகிக்கச்செய்த மோகினிமுதல்வனையடைய, பின்வந பெருந்தவத்தினர் தந்தம்பெண்டிரை யவர்விச்சென்று கண்டு, நம னைவிமாரும் இத்திகம்பரனுல் காண வளை முதலியவற்றைக் கழிந னர் போதுமென்று கருதி " நாமொரு பெண்ணுற நலமழிந்து கா பாசத்திற் கட்டுண்டோம். நம்பன்னியர் ஒருவன மாயத்திற் கற்பிழ தனர்" என்று பேசிக்கிலேசித்து, தமது தவநிலையை மாயனும்மாய தும், தம் பன்னியர் கற்பை யழித்ததும் சங்கரனேயென்று தம ஞானத்தாலுணர்ந்து " பெருந்தவமழியினும் பிராயச்சித்தஞ் செய லாம்; கற்பழிந்ததே எப்பகாலமும் காசினியோர் நிந்திப்பரே" என கழறி, பிக்ஷாடனர் பின்செல்லும் பெண்டிரைக் கூவி, " யாவர்பி செல்கின்றீர்? கற்பழிந்தவர் கங்கைமூழ்கிக் காயத்தை யொ த்தல் கடன்; அன்றேல் உமதுனையடைமின் " என்றனர். மாதர் மார் கணவர்கழறிய மாற்றத்தைக் கருத்துட்கொண்டு கண்ணுதலை பிரியக் கலெழாது பின்றொடருகையில், கருணாமூர்த்தியின் திரு வருளால், உம்பர்பெருமா னுருவையுட்கொண்டு ஒருவாறு மன திரும்பி யகர்சேர்ந்தனர்.

சிவபெருமான் திருத்தெளிச்சேரி யென்னும் நகரினீங்கினர். முனிவர் பெருமானைக் கொல்லவேண்டுமென் றுட்கொண்டு ஆபிசார வேள்விசெய்து அதனிற்றோன்றிய புலி நாகம் முயலகன் முதலியவற்றைப் பிரயோகிக்க, அத்தன் அவற்றைச் சங்கரித்தும் உடைமுதலியவாகத் திருமேனியி லணிந்தும் துன்புற்று, திருமாலுடன் கயிலை சார்ந்து கமலைக்கேள்வனை விடைகொடுத்தனுப்பி வீற்றிருந்தனர். அவர்கள் செய்த அபிசாரவேள்வியைப்பற்றிய விவரணங்களைச் சார்த்தூலஹராமூர்த்தத்திற் காண்க.

தாருகவனமுனிவர் தவத்தையும், அவர்மனைவியர் கற்பையுமழிக்கும்படி பெருமான் திகம்பரராய்ப் பிரமகபாலந் தாங்கிப் பலியேற்கச் சென்றகோலமே பிக்ஷாடனமூர்த்தமெனப் பெயர்பெறும்.

**தாருவன க்ரீடாவிலாசம்.**

வாஸிஷ்டலைங்கம்.

வஸிஷ்டனா ரோகணி ஸம்வாதவாக்கியம்.

விஷ்ணுஸ்ச மாயயா ப்ரஹ்மந் பார்யாபூந்மம ஸுந்தரீ
தயா ஸஹமஹாக்ரீடாங் க்ருத்வாதேவந் திகம்பரம்.

దారువనక్రీడావిలాసము.

వాసిష్ఠలైంగము.

విష్ణుశ్చమాయయాబ్రహ్మన్ భార్యాభూన్మమసుందరీ।
తయాసహమహాక్రీడాం కృత్వాదేవందిగంబరం।

**காஞ்சிபுராணம்.**

"அடியிற்செறித்தபாதுகையுமசைத்தரைப்புலியுமிசையிடறும
வடிவிற்சிறப்படைந்தருளிமுனைமழுவேந்திமருங்கிணைந்த
தொடியிற்பொலிதோண்முனிமகளிர்கரமலைக்கயமாமயல்பூட்டிப்
படியிட்டெழுதாப்பேரழகாற்பலிதேர்பவனதிருவுருவம்."

பிக்ஷாடன மூர்த்தவேடம்:

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

## முப்பத்தாவது
# ஸிம்ஹக்ந மூர்த்தி.

இரணியகசிபென்னும் இயற்பெயருடைய ஒருவன் அசுரகுலத்திற்றோன்றி, தன் குலகுருவாகிய வெள்ளியை வினவி "ஆசிரியனே! யானெவ்வண்ணந் தவஞ்செய்தால் அடைதற்கரிய வரம்பெற்று, வரம்பில்லாக்காலம் வலியிருந்து வாழலாம்" என, அதற்குச் சுக்கிரன் "அரவாபரணனையன்றி யத்தகையவரத்தை யளிப்பவர் யாவர்?" என்று, அப்பரமனைப் பணியும் பலமுறையையும் பயிற்றித் தனதுலகுசார, இரணியகசிபு சிவபிரானது திருவடிகளை இதயத்தி லிருத்தி எண்ணில்கால மியற்றிய தவத்திற் கிறைவா மகிழ்ந்து "யாது வேண்டுவது" என, அசுரன் "அண்ணலே! பிருதிவிமுதலிய ஐம்பூதங்கள்-ஆயுதக்கருவிகள்-வானவர்-மானுடர்-பறவை-விலங்கு முதலிய பிராணிகள் இவையொன்றினாலும் இரவிலும் பகலிலும் இறவா வரம்வேண்டும்" என றேத்த, எம்பிரான் "அவ்வாறேயாகுக" என வரமருளினார்.

தான்பெற்ற வரத்தினாற் செருக்கெய்திய தானவன், நால்வகைச்சேனையையுங் கடல்போற்கூட்டிக் கோசினிமுழுதினுக்குங் காவலனானான். தேவரம்பையர் சித்தமாதர் இயக்கஸ்திரீகள் முதலானோர் சாமரையிரட்டப்பணித்து, இந்திரன்முதலிய எண்டிசைக் காவலர் வந்து நாடோறும் வணங்கிப் பணிப்பனபுரிய வமைத்து, பிரமன்தன் பெயர்கேட்குந்தோறு நடுங்கும்படி, கருடர்-காந்தருவர்-சித்தர்-வித்தியாதரர் முதலானோர் சிந்தை திகைக்கச் செங்கோல்செலுத்தினன்.

**ஸ்காந்தபுராணம்.**

ஶூலாயுதாயஸுரபருந்தகமௌளிமாயா
லீலாயமாநசரணம்புஜபலலவாய
ஹேலாவலேபபரிபூதந்ருஸிம்ஹரமஹேண
லீலாபராயஶரபாக்ருதயேநமோஸ்து.

**ப்ரஹ்மாண்டபுராணம்.**

ருஷய —கதமதேவ ஸாவஜ்ஞத ஸுலக்ஷிஸந்தயம்தகாரக: ஶரபா கயமமஹாகோரம விகருதமரூபமாஸந்ந ஸம்ந்த:-ஶருணவந்தருஷ யஸஸாவே-இதயாநி ஏதாயதுகதவாபகவாநஸவரீடமரகேஸரீ அபா ரமேககாணை ஸமாபயாதயமநிகமஹரி தத ஸாதயகதவாநவிஷ்ணுா ஜீவிதயஸவாபாாதத ததவகதாம்தஸயகருதநிருச ஹருதவாஶரபவி காஹ அதேநதரியந்யமகமதவீரபகா : க்ஷூரூததத

అహంమృగాః శరభాయఋషిబ ధవే । ఋగ్వేదము.

శ్రుతిః తైత్తిరీయకము.

హరిగ్ంహరంతమనుయంతిదేవాః 'విశ్వస్యేశానం ఋషభంమతీనాం।

స్కాందపురాణముపబృంహణము.

హరింహరంతంశరభం విశ్వస్యేశానమీశ్వరం ।
అనుయాంతిసురాస్సర్వే నమోవాక్యైస్సహద్రుతం ॥

కాశీఖండే.

పురాహిరణ్యకశిపుం దైత్యరాజంమహాబలం ।
హత్వాతద్రుధిరాపాన ప్రమత్తంయాచితఃసురైః।
రుద్రఃశరభరూపేణ నరసింహమపీడయత్ ॥

నృసింహోత్తరపురాణం.

తతోనృసింహమాలోక్యచంక్రమ్యఘనసాహసః ।
తన్నృసింహశిరోయావన్నఖైశ్ఛేత్తుంసముద్యతః ॥ ఇత్యాది।

ఏవంసశూలచక్రాత్తౌ మహారణసముద్ధతౌ।
త్రిలోక్యవిబుధాస్సర్వే మహాభయముపాయయుః॥ ఇత్యాది
నృసింహశరభౌదృష్ట్వా తతోబ్రహ్మాసురైస్సహ।
తుష్టావపరమప్రీతః కరాకృత్వాంజలింతతః।

స్కాందపురాణం.

శూలాయుధాయసురబృందకమౌళిమాయా।
లీలాయమానచరణాంబుజపల్లవాయ।
హేలావలేపపరిభూతనృసింహరంహా।
లీలాపరాయశరభాకృతయేనమోస్తు॥

బ్రహ్మాండపురాణము.

ఋషయః। కథందేవస్సర్వజగత్సృష్టిస్థిత్యంతకారకః।
శరభాఖ్యంమహాఘోరంవికృతంరూపమాస్థితః।
సూతః॥ శృణ్వంతుఋషయస్సర్వే।ఇత్యాది
ఏతావదుక్త్వాభగవాన్సవ్రీడంనరకేసరీ।
అపారమేకకరణైః సమాప్యాత్యంతికంహరిః।
తతఃసంత్యక్తవాన్విష్ణుర్జీవితంస్వాపరాధతః।
తద్వక్త్రంతస్యకృత్తించహృత్వాశరభవిగ్రహః।
అతీంద్రియత్వమగమద్వీరభద్రఃక్షణాత్తతః॥

காஞ்சிபுராணம்.

" நன்றுவிரண் டெதிருவழி புகணிகீனவாறுமுகமிரணடுெ
கொன்றாசிறகுமுருத்திரமுனகொமெபோராப்புமெதிர்தோறநச
செஙகீர்பருமிச்செருகருகரமடஙகலாவிசெருத தூரிகொண
டொன்றாருவஙகளமுமுதணித்தவுடையானசரபத திருவுருவம்."
விமலமக்கணமூர்த்தயேகம:



31 சண்டேசாநுக்ரஹ மூர்த்தி.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## முப்பத்தொன்றாவது
# சண்டேசாநுக்ரஹமூர்த்தி.

சோழவளநாட்டிலே, பூர்வம் குமாரக்கடவுள் சூரபன்மனைச்
சங்கரிக்கு நிமித்தம் தென்றிசைநோக்கிச் செல்லுகையில், பரமபதி
யாகிய சிவபெருமானை யருச்சித்த தலங்களு ளொன்றாயும், ஆசாரிய
சுவாமிகளின் தேவாரத் திருப்பதிகம் பெற்றுள்ளதுமான திருச்சே
ய்ஞலூரில் வேதியர்குலத்திற் காசிபகோத்திரத்தில் ஜனித்த யஞ்ஞ
தத்தன் என் றொருவ னுளன். அவன் மனைவி பெயர் பத்திரை. அவ்
விருவருக்குஞ் சற்புத்திரராக விசாரசருமர் என்பார் திருவவதாரஞ்
செய்தனர். அவர்க்கு ஜன்மாந்தர அறிவுத் தொடர்ச்சியால் வேத
வேதாகமங்களை யாவரும் ஓதா துணரு மறிவு ஜனித்தது. அவ
ருக்கு ஏழு வயதிலேயே, தாய் தந்தையர் உபநயனஞ் செய்வித்து,
தக்க ஆசிரியரைக் கொண்டு வேத முதலிய கலைகளைக் கற்பிக்குமுன்,
தாமே யறியுந் திறமுடையோரா யிருத்தலைக் கண்டு வியப்புற்றனர்.

அவ்விசாரசருமர் அளவில்லாத வேதாகமங்களிற் கூறப்படும்
உண்மைப் பொருளெல்லாம் சர்வலோக சரண்யராகிய சிவபெருமா
னது திருவடிகளே யென்றும், சிருட்டி-திதி-சங்காரம்-திரோபவம்-
அநுக்கிரக மென்னும் பஞ்சகிருத்திய காரணமாக ஆநந்தத்தாண
டவம் புரியும் எம்பெருமானே நம்மை யாளாக வுடையா ரென்றும்
உண்மையறிவு தோன்றுவதால், சர்வான்மாக்களிடத்தும் அன்பின்
வழி யொழுகிவருங்காலத்தில், ஒருநாள் அவர் தம்மோடு வேதாத்தி
யயனஞ் செய்யும் அந்தணச்சிறுவரோடு அவ்வூரார் பசுக்களு
டன் கூடிச் செல்லுகையில், ஓரீற்றுப்பசு வொன்று அதனை மேய்

பப்பினைக் குத்தப்போக, அவ்வாயன் சிறிதும் அஞ்சாமற் கோலினலே அதனை மனமுயப் புடைத்தான். அதுகண்ட விசாரசருமர் சாஸ்திரங்களிற் கூறிய விஷயங்களை ஐயம்-திரிபு அறியாமை யாகிய முக்குற்றங்களும் நீங்கத் தெளிந்தோ ராதலின் மனம் பொறுராகி அவ்விடையன்பாற் சென்று, பசுக்கள் சமஸ்த தேவர்களும்-தீர்த்தங்களும் முனிவர்களும் - கணங்களும் பிரியாது சூழ்ந்திருக்கும் உறுப்புக்களை யுடையனவென்றும், சிவபெருமானுக்குத் திருமஞ்சனத்திற் குரிய பஞ்சகவ்வியங்களைக் கொடுப்பனவென்றும், சிவசாதனமாகிய திருவெண்ணீற்றுக்கு மூலம் அவற்றின் சாணமென்றுங் கூறி, அப்பசுக்களைத் தாமே மேய்க்க விரும்பி, அவ்வாயனை நோக்கி "நீயிப் பசுக்களை இனி மேய்க்கவேண்டாம், யானே மேய்ப்பேன்" என்றார். ஆயனும் அஞ்சி வணங்கிச் செல்ல, விசாரசருமர் அவ்வப் பசுக்களின் உரியாரது அனுமதிபெற்று, சமீபத்திலுள்ள மண்ணியாற்றங்கரையிலும் நிறைவாகிய புல்லுள்ள இடங்களிலும் மேய்த்து, நீரூட்டம், வெயில் வேளையில் நிழலிலிருக்கச் செய்து, அந்தியினை அஸ்தமயமாகுமுன் அவ்வவர் வீட்டிற்கனுப்பித் தமதில்லஞ்சேருவர். இதனால் பசுக்கள் அழகொடுபெருகி மிகுதியாகப் பால் பொழிந்தன. பசுக்கட் குரியார் முன்னினும் அதிகம் கறத்தல் கண்டு களித்தனர். அவை விசாரசருமரைச் சிறிதேனும் பிரியமாட்டாதனவாயும் அவரைக் கண்டவுடன் மடி சுரந்து பால் பொழிவனவுமா யிருந்தன.

அதன்பின்னர், சிவபெருமானுக்குத் திருமஞ்சனமாகுந்தகுதி யுடைமையைக் கருதி, அப்பெரியாருக்குச் சிவார்ச்சனையில் அத்தியந்த ஆசை தலைப்பட்டது. உடனே மண்ணியாற்றங் கரையிலுள்ள ஓர் மணற்றிடையில் ஆத்திமரத்தின்கீழ் மணலினாலே ஒரு சிவலிங்கக் குவித்து, கோயில்-கோபுரம்-மதில் முதலியவை வகுத்து, பலவகைப் பத்திர புட்பங்களைக் கொய்து சிவார்ச்சனை செய்து, புதுக்குடங்கள் கொண்டுபோய்ப் பசுக்கள் மடியைத் தீண்ட அவை கனைத்துப் பால் பொழியும்; அதனை யபிடேகஞ்செய்வர்; தனக்கு இடை

யாத பூஜாவுபகரணங்களை மானஸிகமாகச செயதுமுடிப்பா ; இப் பூசையைப பெருமான அவவிலிங்கததினின றனபோ டஙகீகரிப பா , பசுக்கள இதனுற குறையாமல முனபோலவே வீட்டுக்கும பால் கொடுத்துவாதன இதனைபபோலவே விசாரசருமா கெடுநாள சிவா ாசசனை செயதுவருகையில ஒருவன பாாததூ ஊராருடன சொலல, அவாகள சபையாருக்கறிவிகக, சபையாா யஜ்ஞதததனை வருவிதது " உனபிளளை பாலைக கறநது வீணே மணலிற சொரிநது விளையாடு கினறுனும" என, யஜ்ஞதததன "நான அறியேன , இனி அவ்வாறு நடநதால அககுறறம எனதே" எனறு விடுசெனறு, மறுநாள உதய ததி லதைச சோதிகக வெணணி, விசாரசருமா பசுமேயக்கச செல் லுகையில, அவா அறியாமல பினறொடாநதுசெனறு, அவா மணணி யாறறின மணறறிடடிற போனது கணடு, அருகிருநத குராமரத்தி லேறி யொளிததிருநதான.

விசாரசருமா வழககமபோலஸநானஞ்செய்து,சிவலிஙகமுத லியன வகுதது, திருப்பளளிததாமஞ சேகரிததுவைதது, பசுககளி டங குடஙகொணடுசெலல, அவைசொரிநதபாலைக் குடததோடு வை தது, சிவாாசசனை முடிதது, பாறகுடஙகளை யபிடேகஞசெயதனா. குராமரததி லிருநத யஜ்ஞதத்தன் அதுகண டிறஙகி விரைநதோடி வநது பல கொடுஞ சொறகள கூறி, விசாரசருமா முதுகி லடிதத னன. அவா மனம சிவாாசசனையி லழுநதியிருநததால் அவருககுப புலபபடவிலலை யஜஞதததன தான பலமுறை யடிததும அவருண ராமை சிவாாசசனையாலென றறியானுகி, மிகக கோபிததுப பாற குடஙகளைக காலா லிடறிச சிநத, உடனே விசாரசருமா அதுகணடு செய்தவன பிதா-குரு-பிராமணன எனப தறிநதும், அவன செயதது சிவாபராத மாதலின, அவன் காலைத துணிக்கக் கருதி அருகிருந்த ஓா கோலை யெடுகக, அது மழுவாக, அதனுற காலகளை வெட்டிச் சிவ பூசையின் சேடததைப முடிததனா. சிவபெருமான இடபாரூட ராய் உமாதேவியுடன் தோன்றினா. விசாரசருமா பேரானந்த முட



(பக் ௭௫.)

32 தக்ஷிணா மூர்த்தி.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

## முப்பத்திரண்டாவது

# தக்ஷிணாமூர்த்தி.

சிவபெருமான் ஸ்ரீகயிலையங்கிரியிற் சகலதேவர்களுமிறைந்து தங்கட்டங்கள் இஷ்டகாமியங்களை விரும்பியாங்குப்பெறும்படி திருவோலக்கங்கொண் டெழுந்தருளியிருக்கையில், இறைவியார் எழுந்து ஈசனையிணையடிபணிந்து "எம்பெருமானே! எனக்குற்ற தாக்ஷாயணி யென்னும் பெயரும், தேவரீரைப்பணியாத அத்தக்ஷனாற் போஷித்துவந்தவுடலும் மாறும்வண்ணம் வரமருளுக" என விண்ணப்பிக்க, மஹாதேவர் மகிழ்ச்சியுற்று "மாதே! மலைமன்னன் மகளாக நின்னைப் பெறக் கருதி நெடுநாளாய் விடாத்தவம் புரிகின்றான். அவன்பா லுற்று வளர்க. யாம்வந்து மணஞ்செய்வோம்" என்றருளிச்செய்தனர்.

அம்மையார் அரவாபரணரது அடித்தாமரையைப் பணிந்து கட்டளையைச் சிரமேலேற்று, விடைபெற்று இமயமலையையடைந்து அவ்வாறே அருந்தவமாற்றும் அசலமன்னன் அவாநிரம்ப ஓர் தடாகத்தில், தாமரைத்தவிசின்மேற் குழந்தைவடிவுகொண் டிருந்தனர். பர்வதராசன் பார்த்து மகிழ்ச்சியுற்றுத் தவப்பலனைக்கூடியதென்றுட்கொண்டு, அக்குழந்தையை யெடுத்துக்கொண்டு மனையையடைந்து மனைவி யாகிய மேனையினிடத்துக் கொடுத்து வரலாற்றைக் கூற, மேனைபோஷித்துவந்தனள். அம்மையார் ஐந்துவயதுமுதல் தவஞ்செய்திருந்து சங்கரனை மணந்தனர். (விஸ்தாரம் கல்யாணசுந்தரத்திற் காண்க). இதுநிற்க;

ஏமதன்னையாரிவ்வாறு தவத்திருக்கையில், பிரமபுத்திரர்களாகிய சநகன் - சநந்தனன் - சநாதனன் - சநற்குமாரன் எனும் முனிவர் நால்வரும் வேதவாராய்ச்சி செய்து முடித்து, பலவகைத்தவங்களையாற்றி, மீண்டும் வெள்ளிமலையை யணுகி ஆண்டு முதற்பெருங்காவலாகவுள்ள திருநந்திதேவரைப் பணிந்து விடைபெற்றுத் திருச்சந்நிதியுட்சென்று, கண்களாரக் கண்ணுதலைத் தரிசித்து, சாஷ்டாங்கமாகத் தண்டஞ்செய்து, கரமிரண்டையுஞ் சிரமேற்கோத்து, "அருட்கடலே! அநந்தவகையாகிய ஆரணப்பொருளை ஆராய்ச்சி செய்தும் அடியேங்கள் அகமலைந்துகொண்டிருக்கின்றன, அவையடங்கி யாங்கள் கடைத்தேறும்படி அவ்வேதத்தின் உட்கிடையாக வுள்ள பொருளை உபதேசித்தருளவேண்டும்" எனப் பிரார்த்தித்தனர். அங்கவாக்கிசைத்த சங்கரர் "இங்கிருத்திர்" என்றியம்ப, அவர்கள் அண்ணலார் பங்கயப்பதத்தினையேத்தித் தங்கியிருந்தனர்.

அப்பொழுது அரவாபரணர் நந்திபகவானை விளித்து "எம்மைத்தரிசிக்க எத்தகைய தேவர் முதலானோர் எய்தினும், சந்நிதானத்துள் விடவேண்டாம். மதனன் வரில் வரவிடுக" என வாய்மலர்ந்து வாயிலிற்செல்ல விடையளித்தனுப்பி, விடையூர்தி முனிவர் விருப்பின்படி சிவாகமங்களிற் கூறப்பட்ட திரிபதார்த்தங்களாகிய பதி - பசு-பாச லட்சணங்களை விளக்கி வெளியிட்டனர். சநகாதியர் "சங்கரா! எங்கள் மனம் விரிந்திருப்பதால் அவையொடுங்கும் அடைவாக ஞானோபதேசம் செய்யவேண்டும்" என விண்ணப்பித்தனர். திரிபுராபுரங்களை எரிபடப்பொடித்த பரசிவன் குறுநகைகோட்டிக் கூறுவதொன்றுமிலராய் "அப்பொருள் இவ்வாறிருக்கும்" என்று, சடாடவிதாங்கிய முனிவர்கட்குச் சாற்றவேண்டி, திருக்கர மொன்றைத் திருமார்பிற்சேர்த்து சிந்முத்திரை காட்டி முனிவர்போல ஓர் கணப்பொழுது நிஷ்டைகூடி நின்றனர். அதனால் அவர்கள் நால்வரும் மனமொழிமெய் ஞானநிலையுணர்ந்து, பேரின்பப்பெருக்கிலழுந்தி, தம்

கள் செயலொன்று மில்லாதிருந்தனர். (அதுகாலையில் அமரர் மன்ம தனையனுப்ப அவன் ஐயன்மேல் மலர்க்கணை தூயச் சாம்பராய் மாய்ந்தனன். விஸ்தாரம் காமதகனத்திற் காண்க.)

சிவபெருமான் யோகுநீங்கி "முனிவர்காள்! நீங்கள் முன்னிய வகையே நிஷ்டை யனுஷ்டித்து நீடூழிவாழுதிர்" என்று தம் திசை சப்படியேகவிடுத்தனர். இறைவர் தக்ஷிண திசையைநோக்கிச் சநக ருதி நால்வருக்கு மஹருஷிகட்கு உபதேசித்த அவசரம் தக்ஷிணாமூர்த்த மென்ப பெயர்பெறும்.

கந்தபுராணம்.

" இருவருமுணராவண்ணலேனவெள்ளெயிறியாமை
பிரங்கொயகந்தகோடிகிளைத்திருமாத்திறசீர்கொள
கரதலமொன்றுசோதிமோனமுத்திரையைக்காட்டி
யொருகணஞ்செயலொன்றின்றியோகுசெய்வாரிணுற்றான்.

இனையதோர்தன்மைகாட்டியெம்பிரானுணர்த்தக்கண்டு
சனகனேமுதலாவுள்ளோர்தவலருஞானபோதம்
பனுவலினளவன்றெனனும்பான்மையைத்தெரிந்துமுக்கட்
புனிதனதருளாற்றத்தம்புந்தியினொக்கம்பெற்றார்.

தற்பரனினையவாற்றாற்றுபதருணருந்தன்மை
யற்புதஞானபோதமளித்திடுங்கணமதொன்றின
முற்படுகமலப்புத்தேண்முதலியவமரர்க்கெல்லாம்
பற்பலயுகங்கள்சென்றபிறாகினிப்பகர்வதென்னே. '

தக்ஷிணாமூர்த்தயோகம்:



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முப்பத்துமூன்றாவது

# யோகதக்ஷிணாமூர்த்தி.

சிவபெருமான் தக்ஷிணாமூர்த்தமாகச் சநகன்-சநந்தனன்-சநாதனன் சநற்குமாரனென்னும் மகருஷிகள் நால்வர்க்கும், பதி- பசு-பாசலக்ஷணங்களை யுபதேசித்தருளினர், அம்முனிவர் "அடிகளே! அடியேங்கள் அகமனொடுங்கிருத்தலின் வகையொடுங்கும்வண்ணம் அருள்புரியவேண்டும்" என்று விண்ணப்பிக்க, அருளாளர் "அந்தணரே! உடல்முதலியயாவும் அழிபொருளெனவும் ஆன்மா ஒன்றே அழியாப்பொருளெனவும் அறிந்து, ஞானத்தைச் சித்திக்கவேண்டியோர் மோட்ச சாதனமாகிய சாஸ்திரங்களைக் கேட்டலும், சிந்தித்தலும், அவ்விஷயங்களைத் தெளிதலும், அஷ்டாங்கயோகங்களைச் செய்தலும் வேண்டும். சிலர் யோகமாவது ஞானேந்திரியகன்மேந்திரியங்கள் ஒன்றோடொன்று கலத்தலெனவும், மற்றுஞ் சிலர் ஆன்மாவுடன் கூடுதலெனவும், வேறு சிலர் பிராணவாயுவும் அபானவாயுவுஞ் சேருதலெனவுஞ் செப்புவர். ஈண்டெடுத்து விவகரித்த இவையெல்லாம் முடிவில்லாத யோகசாதனமாகக் காட்டா, ஞானல ஜீவான்மாவும் பரமான்மாவும் இரண்டறக்கலத்தலே யோகம் அஃதெவ்வாறெனில், புறக்கரணங்களை அந்தக்கரணங்களி லொடுக்கி மனத்தை ஆன்மாவி லொடுக்கி உத்தமமாகிய ஆன்மாவைப் பரத்திற்சேர்ப்பிப்பது. யோகப்பயிற்சியிற் பழகினாலன்றிப் பரம்பொருளைக் காணமுடியாது. தசவாயுக்களைப் பந்தித்தாலன்றி மனம் ஒருவழிநில்லாது. ஷட்க யோகசாதனத்தாலன்றிச் சத்தியத்தை யுணர்தலருமை. ஆதலின் அத்தகைய யோகத்தைச் சாற்றுவோம் கேட்பீராக :—



33. யோகதக்ஷிணாமூர்த்தி.

இயமம்-நியமம் - ஆதனம் - பிராணாயாமம் - பிரத்தியாகாரம் - தாரணை - தியானம் - சமாதி என அஃதெண்வகைத்து. அவற்றுள்,

இயமம்—கொல்லாமை - சத்தியவசனம் - கள்ளாமை - பிறர்பொருளிச்சியாமை - பஞ்சேந்தியமடக்கல்.

நியமம்—தவம்- பரிசுத்தம் - தத்துவநூலாராய்ச்சி - மனமுவந்திருத்தல் - கடவுள்வழிபாடு.

ஆதனம் எண்வகைத்து. அவையாவன:—தொடைக்கும் முழங்காலுக்கும் நடுவே யிரண்டு உள்ளங்கால்களையுஞ் சேர்த்து இறுமாந்திருத்தலாகிய சுவத்திகம் - சக்கப்பக்கத்தி லிருகாற்பரட்டையு மாற வைத்து அவ்விருகாற் பெருவிரலையுங் கைப்பிடித்திருத்தலாகிய கோமுகம்- இருதொடைமேலும் இரண்டுள்ளங்கால்களையும் மாறித் தோன்ற வைத்தலாகிய பதுமம் - வலத்தொடையில் இடக்காற் பரட்டைச் சேர்த்தி யிறுமாப்புற் றிருத்தலாகிய வீரம் - பீசத்தின்கீழ்ச் சீவனிடத்திற் பரட்டைவைத்திட முழங்கையை முழந்தாளில்வைத்து அவ்விருபதத்தையு மிருகையால் இறுகப்பிடித்து அசையாதிருத்தலாகிய பத்திரம் - இடக்காற்பரட்டாற் சீவனியையழுத்தி வலக்காற் பரடு அப்பரட்டின்கீழ் மூன்றவிருத்தலாகிய முத்தம் - முழங்கைகளிரண்டும் உந்திப் புறத்திலழுந்த, புவியிற் கையூன்றிக் கால்நீட்டித் தலைநிமிர்ந்திருத்தலாகிய மயூரம்-சுகமும் திடனும் எவ்வாறிருக்கின் எய்துமோ அவ்வாறிருத்தலாகிய சுகம் எனப்பனவாம்.

பிராணாயாமம்— பிராண வாயுவை இரேசக பூரக கும்பகஞ் செய்தல்.

பிரத்தியாகாரம்— உபாதியைநீக்கி உணர்வொருக்குவது.

தாரணை— கண்டம் - இதயம் - நெற்றி - கபாலம் - நாபிஇவற்றி லொன்றிற் சித்தஞ்சிக்கவைப்பது.

தியானம்—ஐம்புலன்களை யடக்கி யோகஞ்செய்வது.

**சமாதி,**— மேற்கூறிய இமய நியமாதிகளைப் பொருந்தி, சுழுமுனை முதலாகிய நாடிகட்குக் காரணமாகிய நாபிக்குக் கீழுள்ள ஆதாய, கிழங்கின் நவிலிருக்கும் எழுபத்தீராயிரம் நரம்புகளில், வலமும் இடமும் பிரிந்த இரண்டாகிய இடைகலை பிங்கலைகளைச் சுழுமுனையில் அடக்கி, அச் சுழுமுனையைக் கீழிருந்து தேகமத்தியமாகிய கந்தஸ்தானம் வரையில் இரு கலையாகவும், அதற்குமேல் பிரமரந்திரம் வரையில் ஒரு கலையாகவும், மூலாதாரம் - சுவாதிட்டானம் மணிபூரகம் - அநாகதம் விசுத்தி-ஆஞ்ஞையாகிய ஆறதார சக்கரங்களையும், அதற்குமேல் நாலுசக்கிரங்களையும் வியாபிக்கச்செய்து, பிரமரந்திரம் வரையில் ஆதாரதேவதைகளைச் சகள மாகவும், அப்பால் துவாதசாந்தத்தில் அசல ராகியும் அமேய ராகியும் அதுல ராகியும் குடசமராகியும் மஹா னாகியும் ஞானக் கிரியாசத்தி சரீரி யாகியும் வியாபக ராகியும் சத்திமா னாகியும் மலரஹிதராகியு முள்ள பரசிவ மூர்த்தியை நிஷ்கள மாகவும் தியானித்தலே சிவயோக மென்னும் சமாதியாம்" என் றிவ்வகையாகத் திருவாய்மலர்ந்தருளி, இறைவர் அம்முனிசிரேஷ்டர்கள் அறிந்துகொள்ளும்படி திருவுள்ளங்கொண்டு தாமே சிறிதுபொழுது அத்தகைய நிலையினின் றுணர்த்துவித்தனர்.

அதனால் உள்ளம் விரிவொழிந்து ஒடுங்கப்பெற்ற சநகன்-சநந்தனன்-சநாதனன் - சநற்குமாரனென்னும் முனிவர் நால்வரும் முன்னோனது முண்டகப்பதத்தை வணங்கி விடைபெற்றுத் தமவிருப்பின்படி சென்றனர். சிவபெருமான், பிரமபுத்திரர்களாகிய இருடியர் நால்வரும் எளிதிலுணரும் வகையாக யோகமுறையைப் பயிற்றினமையால், யோகதக்ஷிணாமூர்த்தியென்பதோர் திருநாமமெய்தினர்.

யோகதக்ஷிணாமூர்த்தபேதம்:

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

# முப்பத்து நான்காவது

# தக்ஷிணாமூர்த்தி.

---

சிவபெருமான் பக்தானுக்கிரக காரணமாகத் திருக்கயிலாயகிரியில், தக்ஷிணாமூர்த்தங்கொண்டெழுந்தருளி யிருக்கையில், தும்புருநாரதர் சனகாமுதலிய ருஷிசிரேஷ்டர்கள் இசைஞானத்தை நன்குணரவும், சாமவேதத்தை வீணையிலேற்றுப்பாடவும், தங்கட்கு அருள்புரியவேண்டுமென்னுங் கருத்துட் கொண்டோராய், கயிலைமலையை யடைந்து கருணாமூர்த்தியைப்பணிந்து கைகூப்பிக் "கடவுளையா! அடியேங்கட்கு வீணாகானத்தை விளக்கியருளவேண்டும்" என்று விண்ணப்பித்தனர்.

அம்பிகாபதி "அந்தணரே! அவ்வாறே யாகுக இருத்திர," எனப்பின்வருமாறு அருளிச்செய்யத் தொடங்கினர்.

"நீரிலே பிறந்த வழுந்தல் வேத னிலமயக்கும்
பாரிலே பிறந்த வடிவீழ்ந் தேயமரப் பாறபடலக்கோ
ணேரிலே செம்பகை யாரப்பொரு கூடம் மதிராவுதிற்றல்
சேரினேர் பண்க ளிறைமயக் கப்பெறு சிறந்திடவே' —

என்றபடியே மேற்கூறிய விலக்கத்தக்க மரங்கள் வீணாதண்டத்திற் காகா. அவற்றைக்கொண்டால் நால்வகை இசைக்குற்றத்தை யுண்டு செய்யும். நால்வகைக் குற்றமாவன .—

"செம்பகையார்ப்புக்கூடமதிர்வு.

அவற்றுள்,

செம்பகை யென்பது பண்ணோரா
விளம்பிலோசை யென்மனார்புலவர்.

தூர்ப்பெனப் படுவ தளவிறந்திசைககும.
கூட மெனபது குறிவுறவிளமபின
வாயவதினவாராது மழுஙகியிசைபப துவே.
அதிர் வெனப்படுவதிழுமெனலினறிச
சிதறியுளாககுந ருசசரிபபிசையே "—எனப[illegible]ம.

பஞ்சபாரதீயம்.

"இனனிசைவழியதனறியிசைததலசெமபகையதாகும
சொனனமாததினாயிஞேஙகவிசைததிடுஞசுருதியாபபே
மனனியவிசைவராதுமழுஙகுதலகூடமாகும
நனனுதாலசிதறவுநதலதிாவெனநாட்டிஞேர். "—

ஆதலின மேறகூறிய குறறஙகளைப பயககவலலவாகிய விலக மரங்களை நீக்கி உததமமாகிய விதிககப்பட்ட மரஙகளால வீணைதல டஞசெய்யவேணடும.

"சொல்லிய கொனறை கருங்காலி மெனமுருக்கு
நலல குமிழுந தணககுடனே—மெல்லியலா
யுததம மான மரஙக ளிவையெனறா
விததக யாழோா விதி."

"தளமாய்ச சமநிலததுத தண்காற்று நான்கு
மூளதா யொருஙகுன மினறி—யளவு
முதிரா திளகாது மூன்றுஙகூ றுய
வதுவாகில வீணைதண் டாம்."

"பதுமங்கழலகுடநதாடியொளேள்ளிபண்பூண்டுமினற
விதியமாதணடுகுடையேகுடுமிமெயககோட்டுறபின
மதியமாபோதிகைபுடடினமுகஞசுவாமனனெருததம
விதியமாபததாக்குறப்பெனறுரைததனாமினனிடையே."—

என்றபடியே நலமுடைய மரஙகளைக கொண்டு, நல்ல விலககல சம்பந்தமாகவே நாலவகைய யாழையுஞ் செய்யவேணடும், நா

வகை யாழாவன —பேரியாழ் - மகரயாழ் - சகோடயாழ் செங்கோட்டியாழ் என்பனவாம்.

“பேரியாழ் பின்னு மகரஞ் சகோடமுடன்
சீர்பொலியுஞ் செங்கோடு செப்பினார்—தார்பொலிந்து
மன்னுந் திருமார்ப வண்கூடற் கோமானே
பின்னு முளவே பிற” என்றபடியே நால்வகையாழுஞ் செய்கையில், பேரியாழுக்கு நரம்பு இருபத்தொன்றும், மகரயாழுக்கு நரம்பு பதினேழும், சகோடயாழுக்கு நரம்பு பதினாறும், செங்கோட்டியாழுக்கு நரம்பேழுந் தொடுக்கவேண்டும்.

“ஒன்று மிருபது மோரேழுமேற் பத்துடனே
நின்றபதி னாறேழு நேடுங்கால்—குன்றாத
நால்வகை யாழிற்கு நன்னரம்பு சொன்முறையே
மேல்வகை நூலோர் விதி.’ என்னு மிலக்கணத்தின்படி யாழிற்கு நரம்பெண்ணித் தொடுக்கையில், “கொடும்புரி மயிர்த்துடம்பு முறுக்கிவை நான்கு நடுவண் மரபிற் பகையென மொழிப’ என்கிற குற்றம் நீங்கி, நரம்புகளைத் தொடுத்து, பண்ணல் பரிவட்டணை- ஆராய்தல் - தைவரல் - செலவு-விளையாட்டு கையூழ் -குறும்போக்கு ஆகிய கலைத்தொழி லெண் வகையா லிசை யெழுப்பவேண்டும். அவையாவன :—பண்ணல் - பாடநினைத்த பண்ணுக்கு இணை கிளை பகை நட்பான நரம்புகள் பெயருந்தன்மை மாத்திரையறிந்து வீக்குதல், பரிவட்டணை - அவ்வீக்கின நரம்பை அகவிரலாலும் புறவிரலாலுங் கரணஞ்செய்து தடவிப்பார்த்தல், ஆராய்தல் - ஆரோகண அவரோகணவகையால் இசையைத்தெரிதல், தைவரல் - அநுசுருதியேற்றுதல், செலவு - ஆளத்தியே நிரம்பப்பாடுதல், விளையாட்டு-பாடநினைத்த வண்ணத்திற் சந்தத்தை விடுதல், கையூழ் - வண்ணத்திற்செய்த பாட்டெல்லாம் இன்பமாகப்பாடுதல், குறும்போக்கு-குடகச்செலவுந் துள்ளற்செலவும் பாடுதல் என்பன.

மேற்கூறிய எண்வகைத்தாகியகலைதொழிலால் இசையெழுப்பி, வாதல் - வடித்தல் - உந்தல - உழற்றல் - உருட்டல் - தெருட்டல - அள்ளல - பட்டையெனனும எணவகைப்பட்ட இசைக்கரணத்துடன உடறகுறற முதலியவை நீககப பணபாடவேணடுமே. உடறகுற்றமாவன :—

"கண்ணிமையா கண்டங் துடியா கொடிறசையா
பண்ணளவும வாய்தோனறு பறறெரியா—வெணணிலவை
கள்ளார நறுங்தெரியற் கைதவனே காநதருவா
உள்ளாளப பாட லுணா" எனறகுறறநீககிய வகையாகப பா

டுகவெனறு அவறறின உட்பிரிவுகளோடு நனகு விளஙகத திருவாய மலாநதருளி, யாழவாசிககும்முறையிலககணஙகளை உபதேசிததமைக் கேற்ப, இலககியமாகத தாமே தமது திருககரததில யாழேநதி, திருத தோளிலணைதது கினறு இசையெழுப்பி வாசிததுககாட்டினா. அது கேட்டமுனிவா உளளஙகளி கூாநதனா. தேவா - மனிதா - விலஙகு புளமுதலிய பிராணிகளெல்லாம இனபமிககு வாழநதன. முனிவா முனனேனை வீணுகானததாற் சாமகீதமபாடித துதிததனா.

சிவபெருமான் வீணையினிலக்கணததை யுணாததித் தமதுதிருக்கரத்து வீணையேந்தி வாசிததுககாட்டிய திருவுருவமே வீணுதக்ஷிணுமூாத்த மெனப்படுமே.

வீணுதக்ஷிணு மூர்த்தயேநம;



35 காலாந்தகமூர்த்தி.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

## முப்பத்தைந்தாவது
# காலாந்தகமூர்த்தி.



மிருகண்டுமுனிவர் என்பவர் முற்கலமுனிவர் தவப்புதல்வியாகிய மருத்துவதி யென்னுங் கன்னியை மணந்து, நெடுங்காலம் புத்திரரின்மையால் காசிக்ஷேத்திரத்தை யடைந்து மணிகன்னிகையில் ஸ்நானஞ்செய்து சிவபெருமானை நோக்கிப் புத்திரப்பேற்றினை யவாவித் தவஞ்செய்ய, பெருமான் பிரத்தியட்சமாகி, "முனிவனே! நிர்க்குணம் - ஊமை - செவிடு - குருடு - முடம் - தீராப்பிணி - அறிவின்மையாகிய இவற்றோடுகூடிய நூறுவயதுயிர்வாழும் புதல்வன் வேண்டுமோ? அல்லது அழகு - நல்வடிவு - நோயின்மை - எமதன்பு முதலியவற்றைப்பெற்றுப் பதினாறுவயது ஜீவித்திருக்கும் மைந்தன் வேண்டுமோ? சொல்" என, முனிவன் "வயதுகுறைந்து வாழ்வானாயினுஞ் சற்புத்திரனே விரும்புகிறேன்" என்று விண்ணப்பிக்க, அவ்வாறே வரமளித்து அந்தர்த்தானமாயினர். பிறகு சிறிதுநாளில் அம்முனிவன் மனைவி கருப்பமுற்று நல்லசுபமுகூர்த்தத்தி லோராண்மைந்தனைத் தந்தனள். தேவர் புஷ்பமாரி பொழிந்தனர். தேவதுந்துபிமுதலியன முழங்கின. பிரமதேவன் அச்சிறுவனுக்கு மார்க்கண்டனென நாமகரணஞ்செய்தனன். உபநிட்டாணம் - சந்திமிதித்தல் - அன்னப்பிராசனம் முதலியவற்றை முறைப்படிசெய்து ஒருவருடத்திற் றலைமயிர்களைந்து இரண்டாம்வருடங் காதுவேதமியற்றி, ஐந்து வயதில் உபநயனம்நடத்தி வித்தியாப்பியாசஞ் செய்வித்தனர். மார்க்கண்டேயர் வேதாகமமுதலிய நூல்களிற்றோய்ந்து சிவபெருமானே உண்மைப்பொருளென் றுணர்ந்து சிவபக்தியுஞ் சிவனடியாரிடத் தன்பு

